# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழி வளம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 1 விளைச்சல் : 3 திருவள்ளுவர் ஆண்டு 2051 ஆகத்துத் திங்கள் - 2020




**பேரா.வ.அய்.சுப்பிரமணியம் அவர்களின் கனவு மெய்ப்படுகிறது...**

**மலேசியாவில் சொல்லுருவாக்கம் !**

**தூயதமிழ் மாணவர்களுக்குக் கூடுதல் மதிப்பெண் !**

**இல்லந்தோறும் சொல்லுருவாக்கம் !**

# கலைச்சொற்கள்

1. Bio-war - உயிரிவழித் தாக்குதல்
2. Epidemiologist - கொள்ளை நோயியலர்
3. Termal scanning – உடல் வெப்ப அளவீடு
4. Front-line workers – முன்களப் பணியாளர்
5. Antigen – நோய் எதிர்ப்பு மருந்து
6. Respiratory syndrome – மூச்சுயிர்ப்பு இடர்க்குறி
7. Swab test – சளி ஆய்வு
8. Microorganism – நுண்ம உயிரினம்
9. Immuno suppression – தடுப்பாற்றல் ஒடுக்கம்
10. Personal protective equipment – தனியர் காப்புறை
11. Upper respiratory infection – மேல் மூச்சுறுப்புத்தொற்று
12. Infection Suspected – தொற்று ஐயம்
13. Patient zero – முதல் தொற்றாளர்
14. Contact tracing – தொற்றுத் தடமறிதல்
15. Super spreader – பெருமளவில் தொற்றுப் பரப்பியவர்
16. High risk – பெரும்பரவல் வாய்ப்பு
17. Antibody – நோய் எதிர்ப்பாற்றல்
18. Droplet transmission – நீர்த்துளிவழிப் பரவல்
19. Case Fatality rate – நோயர் இறப்பு விழுக்காடு
20. Disorientation – சூழல் உணர்வின்மை
21. Coniosis – தூசியிழுப்பு நோய்நிலை
22. Bronchial pneumonia – மூச்சுக்குழல் சளிக்காய்ச்சல்
23. Brucellosis – கால்நடைவழிப் பரவும் காய்ச்சல்
24. Biomedical therapy – உயிர் மருத்துவ முறை
25. Anaerobic respiration – காற்றில்லா மூச்சிழுப்பு

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

திருவள்ளுவர் ஆண்டு 2051 - சார்வரி ஆடி
ஆகத்து 2020

ஆசிரியர் : தங்க. காமராசு
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திருமதி. ஜெ. சாந்தி
திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திரு. ப. தீபக்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.78, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர், சென்னை - 600 028.
கட்டணமில்லா அழைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com


உலகத் தமிழர்களின் படைப்புகள், செய்தித் துணுக்குகள், நிகழ்வுகளின் ஒளிப்படங்கள் ஆகியவை வரவேற்கப்படுகின்றன



# ஆசிரியர் பேசுகிறார்

# தொற்றுக்காலத்திலும் துவளவில்லை!

அன்பானவர்களே! வணக்கம்.

பெருந்தொற்றின் பிடியிலிருந்து மெல்ல மெல்ல விடுபட்டு வருகிறோம். தனிமை, விழிப்புணர்வு, ஊட்டவுணவு இவை மூன்றும்தான் மக்களை விரைந்து குணமாக்கும் என்றும், அச்சத்திலிருந்து விடுபட்டாலே பாதித்தொற்று விலகிவிடும் என்றும் நாம் நம்ப வேண்டும். இப்பெருந்தொற்றுக்காலத்திலும் அகரமுதலி இயக்ககம் தம் இயக்கத்திலிருந்தும் இயல்பு நிலையிலிருந்தும் மாறாமல் திட்டப்பணிகளை முன்னேற்றப்பாதையில் எடுத்துச் செல்கின்றது.

''மொழிஞாயிறு'' தேவநேயப் பாவாணர் அவர்களின் வேர்ச்சொல்லாய்வுகளின் அடிப்படையில் தொகுக்கப்பட்ட செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலிகள் (31 மடலங்கள் 13,327 பக்கங்கள் ) காலத்திற்கேற்பப் பழையன கழித்து, புதியன புகுத்தி, சொல்லாக்க வல்லுநர்களைக் கொண்டு செம்மைப்படுத்தி 8050 பக்கங்களாகச் சுருக்கி வெளியிடுவதற்கான பணிகள் நிறைவுநிலையை அடைந்துள்ளன. இவ் வெளியீடு உள்நாடு மற்றும் வெளிநாட்டுத் தமிழறிஞர்கள், மாணவ மாணவிகளிடையே பெரிய விழிப்புணர்வை ஏற்படுத்துவதுடன் மொழி வளர்ச்சியில் நல்ல மாற்றத்தையும் ஏற்றத்தையும் அளிக்கும் என நம்புகின்றேன்.

இதைத்தவிர மாணவர் இலக்கிய அகராதி, அயற்சொல் அகராதி மற்றும் நடைமுறைத் தமிழகராதி ஆகிய அகராதிகளை வெளியிடுவதற்கான பணிகளும் நிறைவடைந்துள்ளன. இவை அனைத்தும் ஓரிரு திங்களில் உங்கள் கைகளில் தவழவிருக்கின்றன. சொற்குவை.காம் (sorkuvai.com) வலைத்தளத்திலும் பதிவேற்றம் செய்யப்பட்டு, பொதுமக்கள் பயன்பாட்டிற்கு வழங்கப்படவுள்ளன. இவைதவிர வேறுசில அகராதிகளின் உருவாக்கப் பணிகளையும் இவ்வியக்ககம் முன்னெடுத்துச் செல்கின்றது

அகரமுதலி இயக்ககம் தற்போது அறிவியல் தொழில்நுட்பத்தின் துணைகொண்டு உலகை வலம் வந்துகொண்டிருக்கின்றது. இயக்குநர் என்றமுறையில் நானும், என்னுடன் சேர்ந்து இயக்ககப் பதிப்பாசிரியர்கள், உதவிப்பதிப்பாசிரியர், தொகுப்பாளர்கள் ஆகியோர் இந்தத் தொற்றுக்காலத்திலும் இதுவரை 10 காணொலி அமர்வுகளில் கலந்துகொண்டு உரைநிகழ்த்தியுள்ளோம். குறிப்பாக இவ்வியக்ககம் கோவை தூயதமிழ் இளைஞர் பாசறையுடன் இணைந்து மூன்று திங்கள்களாக இணையவழி இளையோர் கருத்துரை அமர்வுகளை நடத்தி வருகின்றது. பள்ளிகளும் கல்லூரிகளும் இயங்காத நிலையில் தமிழ்நாட்டின் 38 மாவட்டங்களைச் சேர்ந்த மாணவ மாணவிகளை இணையம் வழியாக இணைத்து நடத்திக்கொண்டிருக்கும் ''தூயதமிழ் பேசுவதில் இளைஞர் எதிர்கொள்ளும் சிக்கல்களும்! தீர்வுகளும்!'' என்ற தலைப்பிலான இந்தக் காணொலி நிகழ்வுகளை உலகம் முழுவதிலிருந்தும் ஆயிரக்கணக்கான மக்கள் பார்த்துப் பாராட்டுவதுடன் தங்கள் கருத்துகளையும் பதிவுசெய்து வருகிறார்கள். ஒவ்வொரு அமர்விலும் 10 கருத்துரையாளர்களைத் தவிர்த்து, பார்வையாளர்களாக 500க்கும் மேற்பட்ட மாணவர்களும் 100க்கும் மேற்பட்ட தமிழறிஞர்களும் பங்கேற்பது நல்ல ஊக்கத்தைத் தருகின்றது.

திங்களுக்கு இரண்டு முறை நடைபெறும் தமிழ்க் கலைக்கழகக் கூட்டம் தொற்றுக் காலத்திலும் தடையின்றி நடைபெற்று வருகின்றது. 2020 சூன் மாதம் வரை 62 கூட்டங்கள் நடைபெற்று இதுவரை 19 ஆயிரத்து 173 கலைச்சொற்களுக்கு வல்லுநர்குழு ஏற்பளித்துள்ளது. அவற்றில் 12,000 கலைச்சொற்களுக்கு அரசாணை பெறப்பட்டுள்ளது. 7,173 கலைச் சொற்களுக்கான அரசாணையை எதிர்நோக்கி இருக்கிறோம். இவை அனைத்தும் சொற்குவை வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன. சூன் திங்களில் மட்டும் இவ்வியக்ககப் பதிப்பாசிரியர்கள், உதவிப்பதிப்பாசிரியர், தொகுப்பாளர்கள் 2,262 கலைச்சொற்களைத் தொகுத்து அதற்கான பணியறிக்கையும் அரசுக்கு அனுப்பி வைக்கப்பட்டுள்ளது.

சொல்லாய்வு, சொல்லாக்கம், அகராதியியல், மொழியியல், தமிழ்மொழி சார்ந்த அரிய செய்திகள் உள்ளிட்டவை குறித்த சிந்தனைகளும் செய்திகளும், இவ்வியக்ககத்தின் செயற்பாடுகளும் மக்களையும் மாணவர்களையும் தமிழார்வலர்களையும் உடனுக்குடன் சென்றுசேரும் வகையில் சொற்குவை வலைத்தளத்தில் 2020 சூன் மாதத்திலிருந்து ஒவ்வொரு மாதமும் முதல் நாளன்று ''சொல்வயல்'' என்ற மின்னிதழ் வெளியிடப்பட்டு நடுநிலையாளர்களின் பாராட்டுகளைப் பெற்றுவருகின்றது.

கொரோனா தொற்றின் அறிகுறி நடுவன் அரசால் அறியப்பட்டுப் பொது ஊரடங்கு நடைமுறைக்கு வந்தவுடன் மார்ச்சு 29ஆம் நாளிலிருந்து ஒவ்வொரு நாளும் 10 கலைச்சொற்களை இணையத்தின் வாயிலாக மக்களின் பயன்பாட்டிற்காக வழங்கி வருகின்றோம். இதுவரை 735 கலைச்சொற்கள் வெளியிடப்பட்டு உள்ளன. அவை பொதுமக்களின் வரவேற்பையும் பாராட்டையும் பெற்றுள்ளன. இப்பதிவுகள் தொடர்ந்து கொண்டிருக்கின்றன. குறிப்பாக, பெற்றோர்கள் இச்சொற்களைக் குழந்தைகளுக்கு அறிமுகப்படுத்திப் பழக்கத்தில் பயன்படுத்த ஊக்கப்படுத்தி வருவதைத் தினமணி நாளிதழ் ''ஊரடங்கிலும் உற்சாகப்படுத்தும் தமிழ்ச்சொற்கள்'' என்ற தலைப்பிலான கட்டுரையால் உலகுக்குத் தெரியப்படுத்தியது. இவையெல்லாம் இவ்வியக்ககத்தின் உழைப்பிற்குக் கிடைத்த பரிசாகக் கருதுகிறோம்.

மொழியைப் பாதுகாக்க வேண்டிய பெரும்பொறுப்பை இளந்தலைமுறையினரிடம் ஒப்படைக்கும் பெருமைமிகு பணியை ஒரு தமிழ் வேள்வியைப் போல இவ்வியக்ககம் செய்துவருகிறது. மொழிப்போர் ஈகியரும் தனித்தமிழ்ப் பற்றாளர்களும் கண்ட கனவை மெய்யாக்க வேண்டும் என்பதில் தமிழ்நாடு அரசு கவனமாக இருப்பதனை இவ்வியக்ககப் பணிகளைக் கொண்டே உலகம் தெரிந்துகொள்ளலாம். அகரமுதலித் திட்டப் பணிகளே அன்னைத் தமிழ்மொழியை வளர்க்கவும் காக்கவும் வல்லமையுள்ளவை. அப்பணிகளில் சிறுதுரும்புகளாக இருந்து பணியாற்றுவதில் பெருமை கொள்கிறோம்.

மீண்டும் சந்திப்போம்..

# அறிய வேண்டிய அரிய செய்தி - 3

## ‘மழைநீரும் மறைநீரும்’

**மழைநீர்**

உலகம் தோன்றியது முதல் இன்று வரை மக்களினம் இயற்கையோடு இயைந்துதான் வாழ்கிறது. அவ்வாறு வாழ்கிற மக்களினத்துக்கு ஐம்பூதங்களில் ஒன்றான நீர் இன்றியமையாததாக அமைந்துள்ளது.

இதனையே, வள்ளுவர் ‘நீரின்றி அமையாது உலகு’ என்று வான்சிறப்பு அதிகாரத்தில் தெளிவாகக் கூறுகின்றார்.

**இலக்கியங்களில் மழைநீர்**

கழக இலக்கியமான நற்றிணை,

“கேழ்கிளர் உத்தி அரவுத்தலை பனிப்பப்

படுமழை உருமின் உரற்றுக்குரல் ”(129,7–8) என்றும்,

குறுந்தொகை, “ஓவாது ஈயும் மாரி வண்கை” (91:5) என்றும்,

புறநானூறு,

“நீரின்று அமையா யாக்கைக்கு எல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே
உண்டி முதற்றே உணவின் பிண்டம்
உணவு எனப்படுவது நிலத்தொடு நீரே
நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு
உடம்பும் உயிரும் படைத்திசினோரே” (18, 28–23) என்றும்

மழையின் சிறப்பினை எடுத்துரைக்கின்றன. இவற்றைப் போல மழையின் சிறப்பினைப் போற்றுகின்ற இலக்கிய வரிகள் தமிழில் ஏராளமாக உள்ளன. மழைநீரைச் சேமித்து வைப்பதற்கான ஏரிகள், குளங்கள் போன்றவை பற்றி சிலப்பதிகாரத்தில் கானல்வரி காதையில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. மழைநீரைச் சேமித்து வைப்பதற்காகப் பொதுக்கிணறு, வரத்துக்கால், மதகு, மிகைநீர் வெளியேறும் ‘கலிங்கு’, குமிழித்தூம்பு போன்றவற்றை அமைப்போர் துறக்கத்திற்குச் (சொர்க்கத்திற்குச்) செல்வார்கள் என்று கூறுகிறது சிறுபஞ்சமூலம்.

நிலத்துக்கு அடியில் ஓடுகின்ற சிறுகுழாய் ‘சுருங்கை’ என்று அழைக்கப்பட்டதனை மணிமேகலை,

“ பெருங்குள மருங்கில் சுருங்கச் சிறுவழி

இரும்பெரு நீத்தம் புகுவது போல” (அறவணர் தொழுதகாதை 79–80)

என்று குறிப்பிடுகிறது. இவ்வாறு பெருக்கெடுத்து ஓடும் நீரைச் சேமிக்க, கல்லைக் கொண்டு தடுப்பணை அமைப்பதால் அது ‘கற்சிறை’ என்று அழகுத்தமிழ்ச் சொல்லால் வழங்கப்படுகிறது. இவ்வாறு பண்டைய காலம்தொட்டு மழைநீர் மிகவும் பயனுடையதாக அமைந்துள்ளது. இம்மழைநீரே வேளாண்மையின் உயிர்நீராகப் பயன்படுகின்றது.

**மறைநீர்**

மறைமுகமாகப் பயன்கொள்ளப்படும் மழைநீரே மறைநீர் எனப்படுகிறது. மறைநீர் என்பது ஒரு வகைப் பொருளியலாகவும் (பொருளாதாரம்) உள்ளது. மொத்த உள்நாட்டு ஆக்கத்தை (Gross Domestic Product) அந்நாட்டின் பணத்தைக் கொண்டு மதிப்பிடுவது போல ஒருநாட்டின் நீர்வளத்தைக் கொண்டு மதிப்பிடும் தண்ணீர்ப் பொருளியல் இது.

அதாவது ஒரு பொருளுக்குள் மறைந்திருக்கும் கண்ணுக்குத் தெரியாத நீர் மறைநீர் ஆகும். இது ஒரு மெய்ம்மம் (தத்துவம்) (அ) பொருளியல். வேளாண் பொருட்கள் அனைத்தும் நீர் கொண்டே விளைவிக்கப்படுகின்றன. அவ்வாறு விளைவிக்கப்படும் பொருள்களுள் கோதுமை, சோளம், நெல் போன்றவற்றில் நீரூட்டம் (நீர்ச்சத்து) கிடையாது. இவை போன்றவை மறைநீர் விளைபொருள்களாகும். அதேநேரத்தில் கரும்பு, வாழை போன்றவற்றில் நீரூட்டம் காணப்படுவதால் இவை போன்றவை மறைநீர் இல்லா விளைபொருள்களாகும். வேளாண்மையில் மட்டுமல்ல பெருந்தொழிற் சாலைகளிலும் மழைநீரை மறைநீராய்ப் பயன்படுத்திப் பொருள்களை ஆக்கம் செய்கிறார்கள்.

**மறைநீர்த் தொழிற்சாலைகள்**

பன்னாட்டு நிறுவனங்கள் ஆண்டுக்கு ஆயிரக் கணக்கான மகிழுந்துகளை (கார்களை) இங்கு உருவாக்குகின்றன. ஏன் ? அவர்கள் தம் நாடுகளில் உருவாக்க முடியாதா ? ஒரு கல்லெடை (ஒரு டன்) எடை கொண்ட ஒரு மகிழுந்தை உருவாக்க நான்கு இலக்கம் படி (லிட்டர்) தண்ணீர் தேவைப்படுகிறது. அவ்வாறு பயன்படுகிற தண்ணீரை நாம் மீண்டும் பயன்படுத்த முடிகிறதா ? முடியாது இதையே மறைநீர் என்கிறோம். ஓர் அயிரச்சீறெடை (ஒரு கிலோ) தோலைப் பதனிட்டு அதனைச் செருப்பாக உருவாக்க 17,000 படி (லிட்டர்) தண்ணீர் தேவைப்படுகிறது. இவற்றைதான் மறைநீர் என்றழைக்கிறோம். மறைநீருக்கும் மழைநீரே அடிப்படை என்பதால், மழைநீரை உரிய முறையில் சேமித்து, சிக்கனமாகப் பயன்படுத்தி நாட்டு வளத்தை நிலைநாட்டுவோம்.

கி.தமிழ்மணி
பதிப்பாசிரியர் – அகரமுதலி இயக்ககம்

# ‘ஏகன்’ தமிழ்ச் சொல்லே...

அண்மையில் கிண்ணிமங்கலத்தில் கிடைத்துள்ள தமிழிக் கல்வெட்டில் ‘‘ஏகன் ஆதன் கோட்டம்’’ என்று பொறிக்கப்பட்டுள்ளது. ஆதன், கோட்டம் எனும்சொற்கள் சங்க இலக்கியத்தில் வந்துள்ளன. இவையிரண்டும் தமிழ்ச்சொற்கள் என்பதில் கருத்துமாறுபாடில்லை. ஆனால் ஏகன் எனும் சொல்லைச் சமசுகிருதத்திலிருந்து தமிழில் வந்து வழங்கிவரும் வடசொல் என்றே கருதுகின்றனர். காரணம் சமசுகிருதத்தில் ‘‘ஏக’’ எனும் அடிப்படையில் பிறந்த சொற்கள் அதிகமாக இருப்பதாலும் ‘‘ஏகன்’’ எனும் சொல் சங்கத் தமிழில் இல்லை என்பதாலும் அதனை வடசொல் என்றே கருத நேர்ந்தது.

அகராதி எழுதியவர்கள் நிகண்டுகளை அடிப்படையாகக்கொண்டு எழுதினர். அவர்கள் ஒரு சொல்லின் எல்லாப் பொருள்களையும் – பொருண்மைகளை, எல்லாச்சொற்களையும் தொகுத்தெழுதினர் என்று கொள்ளமுடியாது. அகராதிகளில் இல்லாத சொற்களும் பொருள்களும் இருக்கவே செய்கின்றன.

இலக்கியங்களை நுட்பமாக ஆராய்கின்ற போது நுட்பமான பொருள்கள் புலப்படுகின்றன.

‘‘ஏகன்’’ எனும் இச்சொல்லாராய்ச்சி இலக்கியம் காட்டும் நுண்பொருள் அடிப்படையில் செய்யப்பெற்றது, இதன்மூலம் ஏகன் தமிழ்ச்சொல்லே என்று நிலைநாட்டியிருப்பதுடன். பிராமியிலிருந்துதான் தமிழி பிறந்தது என்பார் வாய்க்கும் பூட்டுப் போடப்பட்டுள்ளது.

அறிஞர் அரிமாப்பாமகன் எழுதிய ‘‘ஏகன் தமிழ்ச் சொல்லே’’ எனும் ஆய்வின் சுருக்கம்:

**‘‘ஏகன்!**

‘‘மல்லல் வளனே ஏ பெற்று ஆகும்.’’.

(தொல்காப்பியம் – 790).

மல்லல் = வளன், வளம்.

ஏ = பெற்று = பெருக்கம்.

இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறப்படுவது:

‘‘ஏ கல் அடுக்கத்து இருள் முகை இருந்த

குறிஞ்சி நல் ஊர்ப் பெண்டிர்

இன்னும் ஓவார் என் திறத்து அலரே’’ (நற்றிணை –116).

ஏ = உயர்ந்த, பெரிய.

‘‘ஆயம் பேடை அடையும் சோலை ஆரூர் அகத்தீரே!

ஏ, எம்பெருமான்! இதுவே ஆம் ஆறு, உமக்கு ஆட்பட்டோர்க்கு ?

மாயம் காட்டி, பிறவி காட்டி, மறவா மனம் காட்டி,

காயம் காட்டி, கண் நீர் கொண்டால், வாழ்ந்து போதீரே!’’ (சுந்தரர் தேவாரம்).

ஏ எம் பெருமான் = ஏ – விளிக்குறிப்பு எனும் உரையை விட ‘உயர்ந்த எம் பெருமான்’ என்பதே பொருத்தமாகத் தோன்றுகிறது.

ஏயன் = பிறருக்குக் கொடுக்கும் உள்ளத்தால் உயர்ந்தோன்.

ஏயன் = ஏகன்.

ஈ – ஈகு – ஈகை – ஈகம் – ஈகன் > ஏகன்.

ஈயர் x ஈயார்.

‘ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்’. (ஔவையார், கொன்றை வேந்தன்).

தேட்டை = தேடிப் பெற்ற செல்வம்.

ஏ = செல், (சென்று தேடும் செல்வம்).

‘திரைகடல் ஓடியும் திரவியம் தேடு’.

செல் = செல்லுதல் – செல்வம்.

ஏ = செலுத்து, ஏவு – எய் = அம்பு, எயினர் = வேடர்.

வே – வேகு – வேகம் எனல் போல,

ஏ – ஏகு – ஏகம் = செல்வப் பெருக்கம்

ஏ = பெற்று = பெருக்கம்.

‘அவர்கள் வீட்டில் எல்லாம் ஏகமாக – (ஏகபோகமாக) – கிடக்கிறது’ என்பது பேச்சுவழக்கு.

ஏகன் = பெருஞ்செல்வமுடையன், இறைவன்.

ஒ. நோ: ஐசுவரியம் > ஈசுவரன்.

ஏ – மா = செல்வம்(திருமகள்),

‘களிறு கடைஇய தாள்,
கழல் உரீஇய திருந்துஅடிக்,
கணை பொருது கவிவண் கையால்,
கண் ஒளிர்வரூஉம் கவின் சாபத்து
மா மறுத்த மலர் மார்பின்,
தோல் பெயரிய எறுழ் முன்பின்,
எல்லையும் இரவும் எண்ணாய்,’ (புறநானூறு – 7).

மா = பெரிய, விரிந்த, பரந்த,

‘அங்கண் மா ஞாலம் ‘ = பரந்த உலகம்.

மா – மாகம் = பரந்த விசும்பு,

‘‘ஞாயிறு சுமந்த கோடுதிரள் கொண்மூ

மாக விசும்பின் நடுவுநின் றாங்கு,’’ (புறநானூறு – 35).

‘‘போக மாமழை போழ்ந்து புதத்தொறு
மாக மேந்துவ பொன்மணித் தோரண
மாக நாற்றின தாம மணிக்குட
மேக மாநகர் வீதி நிரைத்தவே.’’ (சீவக சிந்தாமணி – 2398).

ஏக மாநகர் வீதி – தனக்கு நிகரில்லாத நகரின் தெருக்களிலே;

ஏக – ஏகம் = ஒப்பற்றது.

ஒன்றுக்கு மேற்பட்டன இருந்தால் தான் ஒப்பிட முடியும். ஒப்பில்லாதது (unique) எனின் ஒன்றே ஒன்றுதான். அதுவே மிக மிக உயர்ந்த (superlative) ஒன்றாகும். அதற்கும் மேலான மற்றொன்று இல்லை என்பதாகும்.

ஆகவே, ஏ – ஏகம் என்பது ஒன்று என்பதைக் குறித்ததாகிறது. பிற மொழிகளிலும் ஏகம், ஏக் = ஒன்று என்று வழங்கிவருகிறது.

ஏகம் – ஏகன் = ஒப்பற்றவன்.

ஒன்று – ‘ஒன்றானவன், உருவில் இரண்டானவன்’, ‘ஏகன், அனேகன்’ என்பன பின்னர் வந்த கொண்முடிபாகும்.

ஒப்பற்றது ஒன்றே ஒன்று தான்.

ஒல் – ஒன்று – ஒரே அண்டம் = universe.

ஒன்று – un, une (French), uno.

ஒன்று – one < une, unit, unity, union, unanimous...

ஏ – ஏண் – ஏணை = நிலைபேறு,

‘‘ஏணை பெற்றிட வெனக்கருள் புரிந்த’’ (திருவருட்பா).

ஏ – ஏது = காரணம்,

‘‘தொல்லவை உரைத்தலும் நுகர்ச்சி ஏத்தலும்
பல் ஆற்றானும் ஊடலின் தகைத்தலும்
உறுதி காட்டலும் அறிவு மெய்ந் நிறுத்தலும்
ஏதுவின் உரைத்தலும் துணிவு காட்டலும்
அணி நிலை உரைத்தலும் கூத்தர் மேன.’’ (தொல்காப்பியம், கற்பியல் – 27).

‘‘எளித்தல் ஏத்தல் வேட்கை உரைத்தல்
கூறுதல் உசா அதல் ஏதீடு தலைப்பாடு
உண்மை செப்பும் கிளவியொடு தொகைஇ
அவ் எழு வகைய என்மனார் புலவர்’’

(தொல்காப்பியம், பொருளியல் – 12). ஏதீடு = ஏது + இடு = காரணம் கூறல்.

ஏது > ஹேது(வ.)

ஏது = காரணம்; ஏதன் = மூலக்காரணன்,

‘‘ஏதனை யேதமி லாவிமை யோர்தொழும்
வேதனை வெண்குழை தோடுவி ளங்கிய
காதனைக் கடிபொழிற் கோழம்பம் மேவிய
நாதனை ஏத்துமின் நும்வினை நையவே’’ (திருஞான சம்பந்தர் தேவாரம்).

ஏதன் ~ ஆதன்.

‘‘ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை
ஆஅதும் என்னு மவர்’’ (திருக்குறள் – 653).

பொருள்: மேன்மேலும் உயர்வோம் என்று விரும்பி முயல்கின்றவர் தம்முடைய புகழ் கெடுவதற்குக் காரணமான செயலைச் செய்யாமல் விடவேண்டும்.

ஆதல் = உயர்தல். ஆதன் = உயர்ந்தோன்.

ஆ – ஆதல் – ஆதன் = அனைத்தும் ஆக மூலக் காரணன்.

நாயனார் < நாயன் – நாதன் – நாயகன் = தலைவன்.

நாதன் < நாதம் = இசை. இசைக்குத் தலைவன் எனலும் உண்டு.

ஆதலின்,

ஏகன் + ஆதன் = ஏகனாதன்,

ஏகன்+நாதன்=ஏகநாதன் – என்பன மூலக்காரணனான ஒப்பற்ற ஒரே தலைவன் என்னும் பொருளனவாம்!

ஒன்று – ஒரு – ஓர் = ஒப்பற்ற, ஒப்பிலா, இணையற்ற... < une, oneness.

universe (n.)

1580s, ‘‘the whole world, cosmos, the totality of existing things,” from Old French univers (12c.), from Latin universum ‘‘all things, everybody, all people, the whole world,” noun use of neuter of adjective universus "all together, all in one, whole, entire, relating to all," literally "turned into one," from unus "one" (from PIE root *oi-no- "one, unique") + versus, past participle of vertere "to turn, turn back, be turned; convert, transform, translate; be changed" (from PIE root *wer- (2) "to turn, bend").

one (adj., prep., n.)

being but a single unit or individual; being a single person, thing, etc. of the class mentioned;" as a pronoun, ‘‘a single person or thing, an individual, somebody;" as a noun, "the first or lowest of the cardinal numerals; single in kind, the same; the first whole number, consisting of a single unit; unity; the symbol representing one or unity;" c. 1200, from Old English an (adjective, pronoun, noun) ‘‘one," from Proto-Germanic *ainaz (source also of Old Norse einn, Danish een, Old Frisian an, Dutch een, German ein, Gothic ains), from PIE root *oi-no- "one, unique."

---

– நன்றி *பேராசிரியர் முத்தழகன் முகநூல் பதிவு

●



# மலேசியாவில் சொல் உருவாக்கம்



இரா.திருமாவளவன்
மலேசிய தமிழ்க்காப்பகக்
கலைச்சொல்லாக்கப்
பிரிவுப் பொறுப்பாளர்
மலேசிய கல்வி அமைச்சு

மலேசிய நாடு தமிழர் தமிழ்நாட்டிலிருந்து புலம்பெயர்ந்து வாழும் முகமையான நாடுகளில் ஒன்றாகும். இங்கு வாழும் தமிழர்கள் இருநூற்றாண்டுகளுக்கும் மேற்பட்டு வாழ்வதால் அவர்களின் மொழி, இன, பண்பாட்டு வளர்ச்சியும் நிலைப்பாடும் தனித்தன்மையுடையனவாக இருப்பது குறிப்பிடத்தக்கது.

தமிழகத்தைத் தவிர்த்து நல்ல தமிழைப் பேணிக் காக்கும் நாடாக மலேசியாவைக் குறிப்பிடலாம். ஆங்கிலேயர் தம் தொழில் நிமித்தமாகவே தமிழரை நொய்வ மரத் தோட்டங்களில் வேலைக்கமர்த்தும் நோக்கில் மலையகத்திற்கு அழைத்து வந்தனர்.

தோட்டத்தில் வேலைக்கமர்ந்த காலத்திலிருந்து இன்று வரை அவர்களின் பணி நிலைகளுக்கேற்பப் புதுப்புதுச் சொல்லாக்கங்களைப் படைத்துள்ளனர் என்பதை மறுக்க முடியாது.

தோட்டப்புறச் சூழலில் தமிழ்மக்களின் அன்றாட வாழ்வியல் சார்ந்த சொற்கள் பலவன தமிழாக உள்ளன. தோட்டப்புறம் என்பது, மக்கள் குடியிருப்புகள், வேலை செய்யும் நொய்வ மரத்தோட்டம் அல்லது செம்பனைத் தோட்டம், அலுவலகம், பணி செய்யும் ஆலை, கோயில், பள்ளிக்கூடம், கள்ளுக்கடை முதலானவற்றை உள்ளடக்கியதாகும். இத்தகு அமைப்பு முறைகளுக்கு அமையவும் தமிழில் முன்பதாகவே பயன்பாட்டில் உள்ள சொற்களை மீளாக்கம் செய்யும் தமிழ் மக்கள் கலைச்சொல்லாக்கம் செய்துள்ளனர். இவ்வாறான ஆக்கங்கள் 1980–கள் வரை நீடித்துள்ளன.

எடுத்துக்காட்டாக :

நிரை = மர வரிசை

கழுத்து வெட்டு = கழுத்து அளவு உயரத்தில் மரத்தைச் சீவல்

ஏணி வெட்டு = ஏணி வைத்து ஏறி மரஞ்சீவல்

ஒட்டுப்பால் = மரத்தில் சீவிய இடத்தில் கோடு போல் ஒட்டியிருக்கும் காய்ந்த பால்

கட்டிப்பால் = சீவப்பட்ட பால் ஒரு குவளையில் (பால்மங்கு) நிறைந்து வழிக்கப்பட்ட பின்னர் மீண்டும் ஒழுகி, காய்ந்து போன கட்டிப்பால்

நடுக்காட்டான் > அடர்ந்த நடுக்காடு

புறங்கான் > சற்று வெளியே தள்ளியிருக்கும் காட்டுப்பகுதி/ இடுகாடு

தண்டல் > தொழிலைக் கண்காணிக்கும் தொழிலர்

ஓடும்பிள்ளை > செய்திகளை ஓடிச்சொல்லும் செய்தி பரப்புநர்

பொட்டு > பால்மரத்தில் வெட்டுகளின் அளவீட்டைக் குறிக்க இடும் அடையாளம்

திரட்டி > பூப்படைந்த பெண்ணுக்குச் செய்யும் சடங்கு

ஒக்கிடு > பழுது நீக்கல்

செம்பனை > பனை வகை மரம். எண்ணெய்க்காகப் பயன்படுவது (oil palm)

பசியாறல் > காலையில் உணவுண்ணல்

வாய்வான வேலை > (ரிஸ்க் risk) தொல்லையான வேலை.

இவை மலேசியத் தோட்ட மக்களால் பயன்படுத்தப் பட்ட சொற்களில் சில.

தோட்டப்புறங்களை விட்டு பெரும்பாலான மக்கள் 1990 கால வட்டத்தில் படிப்படியாய் வெளியேறத்

தொடங்கினர். அன்றாட வாழ்க்கைச் சொற்கள் சூழ்நிலைகளுக்கேற்ப மாறின. பள்ளிக்கூடங்களும் ஊடகங்களும் சொல்லாக்கக் களங்களாக விளங்கின என்றால் மிகையாகாது.

**கலைச்சொல்லாக்கத்திற்கான ஆக்கப்பணிகள்**

ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி விரிவுரைஞர்கள், தனித்தமிழிய அமைப்புகள், தனித்தமிழ்ச் சிந்தனை மிக்க ஊடகவியலாளர்கள் கலைச் சொல்லாக்கப் பணிகளில் ஈடுபட்டதன் பயனாக மலேசியாவில் கலைச்சொற்கள் பல உருவாகப்பட்டு மலேசியாவின் தனித்தன்மையை வெளிப்படுத்தியுள்ளன என்றால் மிகையாகாது.

கல்வி அமைச்சின் தமிழ் சார்ந்த பல் வகையான துறைகளும் இயங்குகின்றமையால் கலைச் சொல்லாக்கத்திற்கான அத்துறைகள் ஆற்றிய பங்களிப்புகளை மறந்துவிட முடியாது. அவற்றின் முயற்சியால் பயிற்றியல் சார்ந்த சொற்கள் பல உருவாக்கப்பட்டுள்ளன. இத்துறைகளின் ஒருங்கிணைந்த முயற்சியின் பயனாய்க் கலைச்சொல் தொகுப்புச் சுவடி அதிகாரப்படியாகவே வெளியிடப்பெற்றது.

இப்பணியில் ஈடுபட்ட கல்வி அமைச்சின் உயர்நிலைத் துறைகள்

- தேர்வு வாரியம்
- கலைத்திட்ட மேம்பாட்டுக் கழகம்
- பாடப்புத்தகத் துறை
- ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி
- மலாயாப் பல்கலைக் கழகம்

இதற்கு முன்பதாக ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிகளின் தொடக்கப்பணியும் குறிப்பிடப்பட வேண்டியதாகும். கோலாலம்பூரில் இயங்கிய லெம்பா பந்தாய் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி, திருக்கோட்டை ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி முதலான கல்லூரிகளில் சிறிய அளவான கலைச்சுவடிகளும் வெளியிடப்பட்டன.

பொது அமைப்புகள் சார்பில், மலேசியத் தமிழ்நெறிக் கழகம் குறிப்பிடத் தக்க பங்களிப்பைச் செய்துள்ளது.

மிக அண்மையில் கல்வி அமைச்சின் பெருந்துணையுடன் மலேசியத் தமிழ்க்காப்பகம் அமைக்கப்பெற்று அதன் வாயிலாகக் கலைச்சொல்லாக்கம் செய்யப்பெற்று வருவது குறிப்பிடத்தக்கதாகும்.

மலேசியக் கலைச்சொல்லாக்க மன்றம் எனும் பெயரில் புலனக் குழு ஒன்றும் தொடங்கப் பெற்று ஒவ்வொரு நாளும் பல்துறை சார்ந்த கலைச் சொற்களைப் பகிர்ந்து வருவதும் குறிப்பிடத் தக்கதாகும்.

கல்வியமைச்சின் சார்பாக வெளியிடப்பெற்ற கலைச்சொல் சுவடியில் இடம்பெற்றுள்ள சொற்களில் சில..

Luminous paint > மிளிர்வுச் சாயம்
Active leaner > மீத்திறப் பயிலுநர்
Adolescents > இளந்தையர்
Album > படக்கோப்பு
Assignment > பயில்பணி/ இடுபணி
Counsellor > நெறியுரைஞர்
Contextual > சூழமைவு
Specialization > வல்லமை
Clinic > பண்டுவகம்
Semi quaver > காலி ( கால் எண்ணிக்கை)
Semi breve > நாலி ( நான்கு எண்ணிக்கை)
E learning > மின் கற்றல்

Zero பூச்சியம் எனும் சொல்லை மலேசிய ஊடகங்கள் சுழியம் என்றே வழங்குகின்றன. வழக்கிலுள்ள அயற்சொல்லை மாற்றி நல்ல தமிழ்ச் சொல்லாக அமைப்பதற்கும் வழக்கில் கொணர்வதற்கும் இங்கும் எதிர்ப்பாளரிடத்துப் போராட வேண்டிய நிலையே உள்ளது. பெரும் போராட்டத்திற்குப் பிறகே சுழியம் எனும் சொல் நிலைப்பாட்டுக்கு வந்தது. மலேசியாவில் உருவாக்கப்பட்டு உலக வழக்கடைந்த சொற்களே, கணினி, இணையம், புலனம், வலையொளி முதலான சொற்களாகும். 2016 ஆம் ஆண்டு மலேசியாவில் நடத்தப்பட்ட தனித் தமிழியக்க மாநாட்டில் வெளியிடப்பட்ட சொற்களும் உலக மதிப்பைப் பெற்றன என்றால் மிகையாகாது.

மலேசியாவில் நடைபெற்ற தனித் தமிழியக்க மாநாட்டில் வெளியிடப்பட்ட நுட்பவியல் கலைச் சொற்களில் சில :

| | | |
|---|---|---|
| WhatsApp | – | புலனம் |
| Youtube | – | வலையொளி |
| Instagram | – | படவரி |
| WeChat | – | அளாவி |
| Messanger | – | பற்றியம் |
| GPS | – | தடங்காட்டி |
| CCTV | – | மறைகாணி |
| Skype | – | காயலை |
| Bluetooth | – | ஊடலை |
| WiFi | – | அருகலை |

Hotspot – பகிரலை
Broadband – ஆலலை
Online – இயங்கலை
Offline – முடக்கலை
Harddisk – வன்தட்டு
OCR – எழுத்துணரி
LED – ஒளிர்விமுனை
3D – முத்திரட்சி
Projector – ஒளிவீச்சு
Printer – அச்சுப்பொறி
Simcard – செறிவட்டை
Scanner – வருடி
Cyber – மின்வெளி
Meme – போன்மி

இவற்றைத் தவிர்த்து அண்மையில் கோறனி நோய் ( COVID 19) தொடர்பான நூற்றுக்கும் மேற்பட்ட கலைச்சொற்களும் வெளியிடப்பெற்றன. அவற்றுள் சில..

Dropper > சொட்டி
Self monitor > தற்காணிப்பு
Alveoli > அள்வளை/ நுண்ணறை
Flatten the curve >வளைச்சமனாக்கல்
Self-isolation > தன் தனிமை
Circulatory system > குருதிச்சுற்று முறைமை
Agglutination - ஒட்டுத்திரள்
Break the chain > தொடரறல்/ தொடரி அறுத்தல்
GenBank > மரபியல் தரவகம்

கலைச்சொல் உருவாக்க முயற்சி மேற்கொள்ளப் பெற்றாலும் அவற்றை நடைமுறைப்படுத்த மேற்கொள்ளும் நடவடிக்கையும் இன்றியமையாததாகும். இவற்றை நடைமுறைப்படுத்த ஒலி, ஒளி ஊடகங்களின் துணையும் தாளிகைகளின் துணையும் இன்றியமையாததாகும். இவையே மக்களிடையே எளிமையில் கொண்டு சேர்ப்பவையாகும். மலேசியாவில் ஊடகங்களின் பங்களிப்பைப் பெரிதெனவே போற்ற வேண்டும். குமுக ஊடகங்களின் பங்களிப்பும் பெரிதும் போற்றக் கூடியதாகும். பொது ஊடகங்களால் இயலாத சூழலில் குமுக ஊடகங்களே பெரும்பணி செய்கின்றன. இற்றைச் சூழலில் குமுக ஊடகங்கள் கருத்துக் கட்டற்றவையாதலால் சொல்லாக்கப் பரவலைச் செய்வதில் பெருந்துணை புரிகின்றன.

கலைச்சொல்லாக்கத்திற்குப் பெரும்பாலும் கொள்கை முரண்களே கரணியமாக விளங்குகின்றன. கலைச்சொற்கள் அனைத்தும் தூயதமிழாக இருக்கின்றமையால் பிறமொழிப் பற்றாளர்கள் தமிழ்க்கலைச்சொல்லாக்கத்தை விரும்புவதில்லை. இருப்பினும் இத்தகு சிக்கல்களையும் தாண்டி தமிழ்க் கலைச்சொல்லாக்கப்பணி மலேசியாவில் செவ்வனே நடந்து வருகின்றது என்பதை வரலாற்றுப் பரப்பில் நிகழ்ந்துள்ள பல்வேறு மாற்றங்கள்வழி நம்மால் தெள்ளென உணர முடிகின்றது.

●



13.08.2019 அன்று, அகரமுதலி இயக்ககத்தில் நடைபெற்ற தமிழ்க் கலைக்கழகத்தின் 43-ஆவது கூட்டத்தில், இக்கட்டுரையாளர் மலேசியா இரா.திருமாவளவன், தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழக உதவிப்பதிவாளர் ச. மல்லிகா, மற்றும் புலவர் செந்தலை ந.கவுதமன் ஆகியோர் சிறப்பு அழைப்பாளர்களாகக் கலந்துகொண்ட காட்சி .

# தூயதமிழ் மாணவர்களுக்குக் கூடுதல் மதிப்பெண்!

## - பள்ளி மாணவி கோரிக்கை

தமிழ்நாடு அரசு செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் கோவை தூயதமிழ் இளைஞர் பாசறை இணைந்து நடத்திய, "தூயதமிழ் பேசுவதில் இளைஞர்கள் எதிர்கொள்ளும் சிக்கல்களும்! தீர்வுகளும்!" என்ற தலைப்பிலான "இணையவழி இளையோர் கருத்துரையின் இரண்டாவது அமர்வு" 28.06.2020 அன்று சிறப்பாக நடைபெற்றது. நிகழ்வில் பங்கேற்ற பத்தாம் வகுப்பு மாணவி வே.நிவேதிதா தூய தமிழ் மாணவர்களை ஊக்கப்படுத்துவதற்குத் தேர்வில் கூடுதல் மதிப்பெண் அளிக்கும் வகையில் வினாத்தாள்களை உருவாக்கலாம் எனக் கோரிக்கை வைத்தார். அமர்வில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குநர் திரு.தங்க. காமராசு அவர்கள் தூயதமிழ் பேசுவதின் சிறப்பு, இன்றியமையாமை மற்றும் அகரமுதலித் திட்டத்தின் செயல்பாடுகள் குறித்துச் செறிவாக எடுத்துரைத்து நிகழ்வில் தலைமை தாங்கினார். முன்னதாக, தூயதமிழ்ப் பற்றாளர் பரிசுபெற்ற திரு.சி.மணிகண்டன் வரவேற்புரை வழங்கினார். தமிழகத்தின் பல மாவட்டங்களிலிருந்தும் கலந்து கொண்ட தூயதமிழ் இளைஞர்களான பத்துக் கருத்துரையாளர்களும்



திரு. சி. மணிகண்டன், கோவை

"தூயதமிழ் பேசுவதில் இளையோர் காணும் சிக்கல்களும் தீர்வுகளும்" எனும் பொருண்மையில் தங்கள் கருத்தினைத் தெளிவாகவும் பிறமொழிக் கலப்பு இல்லாமலும் வெளிப்படுத்தினார்கள். நிறைவாக, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் தொகுப்பாளர் திருமதி. ஜெ.சாந்தி நன்றி கூறினார். இந்த அமர்வில் நற்றமிழ் செ.வ.இராமாநுசம், இலண்டன் உலகத் தமிழ்மொழிக் கலைக்கழகம் சிவாப்பிள்ளை, துபாய் செந்தமிழர் பாசறை பாலாஜி, துபாய் முகமது முகைதீன், அபுதாபி தமிழ் மக்கள் மன்றம் பாஸ்கர், கொரியா தமிழ்ப்பேரவை ஹரிபாலன் உள்ளிட்ட பன்னாட்டுத் தமிழறிஞர்கள் கலந்து கொண்டு வாழ்த்துரை வழங்கினர். அமர்வில் நூற்றுக்கும் மேற்பட்ட தமிழ் ஆர்வலர்கள் கலந்து கொண்டனர்.

# காணொலியில் கருத்து முழக்கம்!



மு. அருண்குமார், திண்டுக்கல் மாவட்டம்

இன்றைய நிலையில் பள்ளி, கல்லூரி, வணிக நிறுவனங்கள் என எல்லா இடங்களிலும் ஆங்கிலம். உண்ணும் உணவு முதல் உடுத்தும் உடை வரை அனைத்தும் ஆங்கிலம். இத்தகைய காரணத்தினால் நாமும் ஆங்கிலத்திற்கு மாறி விட்டோம் . இந்த நிலையை மாற்ற வேண்டும் என்றால் முதலில் அரசும் மக்களும் அனைத்தையும் தமிழில் மாற்ற வேண்டும். அதுமட்டுமல்லாமல், ஒரு மாவட்டத்தின் ஆட்சியாளராக இருந்தாலும் அவருடைய குழந்தையையும் தமிழிலேயே படிக்க வகைசெய்ய வேண்டும். இன்று நம்மில் பலர் தமிழில் பேசுவதை நேரத்தை வீணாக்குவது போல் நினைக்கின்றோம் .



யூ.அஸ்வத் பெனாஷுர் ,
ஐந்தாம் வகுப்பு, கோவை.

ஆப்பிரிக்க நாடான கானாவில் நடைபெற்ற ஆய்வில் 'பிறமொழிக் கல்வியினைக் கற்றவர் களைவிட தாய்மொழிக் கல்வியினைக் கற்றவர்களுக்கு 40 விழுக்காடு எழுத்தறிவுத்திறன் அதிகமாக இருக்கிறது என்பது உறுதியாகி இருக்கின்றது'. எனவே தமிழர்கள் தமிழில் எழுதுவதும் பேசுவதும்தான் சிறப்பு என்ற எண்ணத்தை விதைக்க வேண்டும். தமிழில் பேசுவேன் என்பதை உறுதிமொழியாக்காமல், தமிழில்தான் பேசுவேன் என்று உறுதியாகச் சொல்ல வேண்டும்.



பா. சரவணன், கம்பம்,
தேனி மாவட்டம்.

புதுச்சொற்களைக் கடன் வாங்குவதைவிட இருக்கிற சொற்களைப் பயன்படுத்தாமல் விடுவதுதான் பெரிய பிழை. இப்போதைய சூழலில் தூயதமிழுக்கும் வழக்குமொழிக்கும் வந்திருக்கின்ற பேரிடர் தொலைக்காட்சி தான். தூயதமிழ் மற்றும் வழக்குத்தமிழின் களஞ்சியம் போல இருக்கின்றவர்கள் பாட்டி தாத்தா தான். ஆனால் இப்போது எல்லாம் இந்தத் தொலைக் காட்சியை நாம் உற்றுப்பார்த்துக்கொண்டே இருப்பதனால் அவங்ககிட்ட இருந்து சொற்கள் அடுத்த தலைமுறையாகிய நமக்கு நகர்வது நின்று போய்விட்டது. அனைத்துத் தனியார் மற்றும் அரசுப் பள்ளிகளுக்கும் தமிழ்வழிக் கல்வி கட்டாயம் என்பதைச் சட்டமாக்குதல் வேண்டும். ஆங்கிலம் மொழிப் பாடமாகவும் , தமிழ் பயிற்று மொழியாகவும் இருத்தல் வேண்டும் .



திருப்பூர் மகிழவன்

தமிழை மறக்கக்கூடிய குமுகாயமாக இன்று இளைய குமுகாயம் மாறிக்கொண்டிருக்கிறது. காரணம் தமிழ் படித்தால் வேலை கிடைக்குமா? என்ற ஐயம். எல்லா மாநிலங்களும் தங்களது மாநில மொழிகளைக் கட்டாயமாகப் பாடத்திட்டத்தில் புகுத்திவருகிறார்கள். அதையே நாமும் பின்பற்றலாம்.

கடைகள், வணிகநிலையங்கள், பொதுத்துறை நிறுவனங்களின் பெயர்களைக் கட்டாயம் தமிழில் வைக்க வேண்டும் என்ற ஆணையை அரசு பிறப்பிக்க வேண்டும்.

இனி, கண்டுபிடிக்கப்படும் புதிய அறிவியல் கண்டுபிடிப்புகளுக்கு அவற்றின் ஆங்கிலப் பெயருக்கு இணையாக உடனுக்குடன் தூயதமிழ்ப் பெயர்களைச் சூட்டி அவற்றையே அழைக்கும்படி செய்ய வேண்டும்.

ர. முகமது அர்சத் சுகேல் (எட்டாம் வகுப்பு) சென்னை



தமிழே மறை (வேத) மொழிக்கு முந்தையது என்பதை மலையாளத்தில் சட்டம்பி அடிகள் 1901ஆம் ஆண்டில் “ ஆதிபாலி” என்னும் நூலில் நிலை நிறுத்தியிருக்கிறார்கள். இன்றைக்குத் தமிழை அவமானமாக எண்ணுகின்றோம். தமிழ் அவமானம் அல்ல அது நம் அடையாளம். சிந்தனையின் தொடக்கப்புள்ளி தாய்மொழிதான் என்று தெரிந்துகொண்ட நாம் நம் பிள்ளைகளை ஆங்கிலவழிக் கல்வியில் படிக்க வைப்பது சரிதானா?

ஆங்கிலம் மட்டும்தான் அறிவு; அதனைக் கற்றால்தான் வேலை வாய்ப்பு கிடைக்கும்; நல்ல சம்பளம் வாங்க முடியும்; அகிலமே மதிக்கும் என்பதுதான் பெற்றோர்களின் மனநிலை. அப்படிப் படிக்கும் மாணவர்கள் இயல்பாகச் சிந்திக்க முடிகிறதா? ஆங்கிலமொழிவழிக் கல்வி புரிந்துகொள்ளும் திறனை வளர்க்காமல் மனனம் செய்யும் முறையை மட்டும் கற்றுக்கொடுக்கிறது மம்மி, அங்கிள் என்று குழந்தைகளை அழைக்கச் சொல்லி பெருமைப்படுவதைத் கொஞ்சம் மாற்றி, முடிந்தவரை தமிழை நம் குழந்தைகளுக்குக் கற்றுக்கொடுப்போம். நாளும் புதுப்புதுத் தமிழ்ச் சொற்களை எடுத்துப் படிப்போம்.

கு.ஜீவலெட்சுமி, இராமநாதபுரம்



இளைஞர்கள் தூயதமிழ் பேசினால் என்ன பயன்? மேற்படிப்புக்கு உதவுமா? நேர்காணலில் பயன்படுமா? இல்லையென்றால் மேலைநாட்டுக்குச் சென்று பிழைக்க முடியுமா? என எண்ணி தமிழில் பேசத் தயங்குகிறார்கள். இதற்குத் தீர்வு வேலைவாய்ப்பளிக்கும் நிறுவனங்கள் தமிழ்மொழிக்கு முன்னுரிமை அளிக்க வேண்டும். அரசுப் பணியில் இருக்கும் அனைவரும் அலுவலக நேரத்தில் தூயதமிழில் மட்டுமே உரையாடல் நிகழ்த்த வேண்டும் என்று ஒரு சட்டம் கொண்டுவரப்பட்டால் இளைஞர்கள் தூயதமிழ் பேசுவதற்கு ஊக்கமாக அமையும். அலைபேசி,கணினி போன்ற கருவிகளில் தமிழை விருப்பமொழியாக இடம்பெறச்செய்யாமல் கட்டாயமாக்க வேண்டும். தொழில்நுட்ப வளர்ச்சியால் அதிக அளவில் பிறமொழிச்சொற்கள் உருவாகிவிட்டன. இதற்குத் தீர்வு கலைச்சொல்லாக்கம். இக்கால இளைஞர்களைத் தன்வயப்படுத்தி வைத்திருக்கும் ஊடகம், திரைப்படத் துறையில் தூயதமிழை இடம்பெறச் செய்தால் பெரிய அளவில் மாற்றம் ஏற்படும்

பா.விக்னேஷ்வரன், ஈரோடு மாவட்டம்.

மக்களினத்திற்கு இடையே ஏற்பட்ட பிரிவின் ஆதி வடிவம் மொழிதான். அதே சமயம் மாந்த மூளையின் ஆகச்சிறந்த கண்டுபிடிப்பும் மொழிதான். பலதரப்பட்ட மக்கள் ஒன்றிணைந்து வாழும் பொழுது, அவர்தம் மொழிகளுக்கிடையே கலத்தலும், திரிதலும் இயல்பே. ஆனால் அவையே காலங்காலமாகத் தொடர்வதே தவறு.



இத்தகைய சூழலில் தூயதமிழ் பேச விழையும் இளையோர் எதிர்கொள்ளும் மூன்று தலையாய சிக்கல்கள்,

1. தூயதமிழை அறிந்து கொள்ளும் போது ஏற்படும் சிக்கல்,
2. அறிந்ததைப் புரிந்து கொள்ளும்போது ஏற்படும் சிக்கல்,
3. அதனைப் பிறருடன் பகிர்ந்துகொள்ளும் போது ஏற்படும் சிக்கல்.

**அறிதலில் ஏற்படும் சிக்கல்**

தூயதமிழில் பேச முதலில், எது தூயதமிழ் என அறிதல் வேண்டும். ஏறக்குறைய ஆறு இலக்கம் சொற்களைக் கொண்ட நம் மொழியிலிருந்து, குறைந்தது அறுபதாயிரம் சொற்களையாவது அனைவரையும் அறியச் செய்தல் வேண்டும். இதற்கு அகராதிகள் தான் ஆகச்சிறந்த வழி! ஆம், ஆங்கில அரசு ஆண்டுதோறும் ஏற்பிசைவு பெற்ற (அங்கீகரிக்கப்பட்ட) பல்கலைக்கழகங்கள் வாயிலாகத் தம் மொழிக்கான அகராதிகளைப் புதுப்பிக்கிறது. அதைப்போலவே நம் தமிழக அரசும், தூயதமிழ் நிறுவனங்களுக்கு ஏற்பிசைவளித்து, ஆண்டுதோறும் தமிழகராதிகளைப் புதுப்பிக்க ஆவன செய்தால், அறிதலின் போது ஏற்படும் சிக்கலை அறவே களைய முடியும்.

> “
>
> வேழம் என்ற சொல்லுக்கு யானை என்று மட்டுமே பொருள் என்று நினைத்திருந்த வேளையில்...
>
> ”

**புரிதலின் போது ஏற்படும் சிக்கல்**

அறிந்துகொண்ட ஒரு சொல்லைப் புரிந்துகொள்ளும்போதும் எண்ணற்ற சிக்கல்களை எதிர்கொள்கிறோம்.

சான்றாக, நான் ‘வேழம்’ என்ற சொல்லுக்கு யானை என்று மட்டுமே பொருள் என்று நினைத்திருந்த வேளையில் அகராதி, இணையம் வாயிலாக அச்சொல்லுக்குக் கரும்பு, மூங்கில் என்ற பொருள்களும் இருப்பதை அறிந்து எது உண்மையான பொருள் என்றும், எந்தப் பொருள் எந்த இடத்தில் வரும் என்றும் அறியாமல் குழம்பினேன். இது நாம் அனைவரும் எதிர்கொள்ளும் சிக்கல் தான். தமிழாய்ந்த அறிஞர்களைக் கொண்டு, உருவாக்கப்படும் அகராதிகளில் ஒரு சொல்லின், பல பொருள்களையும் அவை பயின்று வரும் பல இடங்களையும் அதன் சரியான பலுக்கலையும் (உச்சரிப்பையும்) இடம்பெறச் செய்வதன் மூலம் இச்சிக்கலைத் தீர்க்கலாம்.

**பகிர்தலில் ஏற்படும் சிக்கல்**

‘‘உனக்குள் உண்டாகாத மாற்றத்தை உன்னால் ஊருக்குள் உண்டாக்க முடியாது’’ என்கிறது ஓர் உருசிய நாட்டுப் பழமொழி. எனவே மாற்றம் நம்மிடம் இருந்தே தொடங்கட்டும். நாம் அறிந்த தமிழ்ச் சொற்களை அங்காடிகளின் பெயர்ப்பலகை முதல் அழைப்பிதழ்கள் வரை அனைத்திலும் இடம்பெறச் செய்தல் வேண்டும். பயிலகம், எழிலகம், மருந்தகம் என எங்குக் காணினும் தமிழை அச்சிட வேண்டும். வழிபடும் தெய்வங்கள்முதல் நம் வீட்டின் அடுத்த தலைமுறை குழந்தைகள் வரை அனைவருக்கும் தூயதமிழ்ப் பெயர்களைச் சூட்ட வேண்டும்.

தூயதமிழ் இளைஞர்கள் பேசிய கருத்துரைகளைச்
சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தின் காட்சியகப் பக்கத்திலும்,
வலையொளியிலும் (Youtube) காணலாம்.

இ.நேரு, பன்னிரண்டாம் வகுப்பு, கள்ளக்குறிச்சி மாவட்டம்



ஆங்கிலம் பேசினால்தான் உடையுண்டு உணவுண்டு என்பதாக நினைத்துக் கொள்கிறார்கள். ஆனால் தூயதமிழ் பேசினால்தான் மானம் உண்டு மதிப்பு உண்டு என்பதை மறந்து விடுகிறார்கள் இன்றைய மக்கள்.

புரியாத மொழியில் பேசுபவரை உயர்வாகப் பார்க்கும் குமுகாயம் சரியாகத் தமிழ்பேசுபவரை மட்டும் புறம்தள்ளிப் பார்க்கிறது. அனைத்துப் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் இறைவணக்கப்பாடலும் தேசப்பாடலும் (தேசியகீதமும்) தமிழ் மொழியில் தான் பாடப்பட வேண்டும் என்று அரசு ஆணையிடலாம்.

வெளிநாடுகளில் இருந்து அல்லது வெளிமாநிலங்களில் இருந்து உருவாக்கப்பட்டு வரும் பொருட்கள், செயலிகள் என அனைத்திற்கும் தமிழ்ப்பெயர் இட்டு அழைத்தோமேயானால் 95 விழுக்காடு நாம் தூயதமிழியேலேயே பேசலாம்.

வே.நிவேதிதா, பத்தாம் வகுப்பு, வேதாரண்யம்

தமிழகத்தில் உள்ள ஊர்ப்பெயர்கள், தெருப்பெயர்கள், கோவில் பெயர்களில் பிறமொழிச் சொற்கள் கலந்தோ அல்லது தமிழ்மொழியே மருவியோ காணப்படுகிறது. இவை அனைத்தையும் தூயதமிழில் மாற்ற அரசு ஆணை பிறப்பிக்க வேண்டும். மேலும், தமிழகத்தில் உள்ள வணிக நிறுவனங்களின் விளம்பரப் பலகைகள், உணவகங்களின் விளம்பரப் பலகைகள், உணவுப் பட்டியல், விலைப்பட்டியல் என அனைத்தும் தூயதமிழிலேயே இருக்க வேண்டும் என்று அரசு மற்றொரு ஆணை பிறப்பிக்க வேண்டும். இதைக் கடைப் பிடிப்பவர்களுக்கு வரிச் சலுகையும், மீறுபவர்களுக்கு அதிக வரிவிதிப்பும் வழங்கவேண்டும்.



பள்ளி, கல்லூரிகளில் வினாத்தாள் வடிவத்தை மாற்ற வேண்டும். வினாத்தாளில் ஐம்பது விழுக்காடு மட்டுமே பாடப்புத்தகத்தில் உள்ள வினாக்களுக்கு விடை எழுதுவது போல் இருக்க வேண்டும்; மீதி 30 விழுக்காடு பிறமொழிச் சொற்களுக்கு இணையான தூயதமிழ்ச் சொற்கள் எழுதுவது போல் அமைய வேண்டும்; மீதி 20 விழுக்காடு மதிப்பெண் அறிவியல் பாடத்தில் செய்முறைத் தேர்வுக்கு மதிப்பெண் வழங்குவது போலத் தமிழ்ப் பாடத்திலும் தூய தமிழில் தங்குதடையின்றிப் பேசும் மாணவர்களுக்கு வழங்கும் வகையில் அமைய வேண்டும்.

வளர்ந்த நாடுகளில் உள்ளதைப் போல நமது அரசும் மருத்துவம், பொறியியல், கலை மற்றும் அறிவியல் போன்ற மேல்படிப்புகளுக்கு நம்முடைய தாய்மொழியையே பயிற்று மொழியாக அறிவிக்க வேண்டும்

ர.மஞ்சு ஸ்ரீ, பத்தாம் வகுப்பு, திருச்சி மாவட்டம்.

ஒருவருடன் அவருக்குப் புரியும் மொழியில் பேசினால் அது அவருடைய அறிவைச் சென்றடையும். அதுவே அவருடைய தாய்மொழியில் அவருடன் பேசினால் அது அவருடைய மனத்தைச் சென்றடையும் என்பது நெல்சன் மண்டேலாவின் கருத்து. இன்றைய சூழ்நிலையில் பெரும்பாலான மாணவர்கள் ஆங்கிலவழிப் பள்ளியில் தான் பயில்கின்றனர். ஆங்கிலம் மட்டுமே பேச வேண்டும் என்ற கட்டாயம் பள்ளியில் மட்டும் தானா ?. உறுதியாக இல்லை, வீட்டிலும் சுற்றுப்புறத்திலும் கூட அந்தக் கட்டாயம் இருக்கத்தான் செய்கிறது.



தூயதமிழ் பேசுவதிலேயே சிக்கல்களைச் சந்திக்கும் இளையோர்களின் விழுக்காடு தான் அதிகமாக இருக்கிறது. அதற்குக் காரணம் சில ஆங்கிலச் சொற்களுக்கு இணையான தூயதமிழ்ச் சொற்கள் அவர்களுக்குத் தெரிவதில்லை. அந்த வகையில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் உருவாக்கியிருக்கும் “சொற்குவை”யில் தமிழ்ச் சொற்களுக்கு இணையான ஆங்கிலச் சொற்களும் ஆங்கிலச் சொற்களுக்கு இணையான தூயதமிழ்ச் சொற்களும் குவிந்து கிடக்கின்றன. இந்தச் சொற்குவையைத் தமிழார்வலர்கள் அனைவரும் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். நமது வீட்டில் முதலில் தமிழில் பேசத் தொடங்கினால் மட்டும் தான் நம்மால் வெளியே இயல்பாகத் தூயதமிழில் பேச முடியும்.

# வேரும் விழுதுகளும்

தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் முதல் துணைவேந்தர்

## பேரா.வ.அய்.சுப்பிரமணியம் அவர்களின் கனவு மெய்ப்படுகிறது



ஒவ்வொரு மொழிக்கும் சொற்கள்தாம் அடிப்படைக் கூறுகளாகும். மொழிவளம் என்பது சொல்வளமே ஆகும். ஒவ்வொரு மொழியும் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள முதலில் காத்துக்கொள்ள வேண்டியது சொற்களையே ஆகும். மொழி வளர்ச்சி என்பதும் சொற்களின் எண்ணிக்கைப் பெருக்கமே.

அகராதிகள் சொற்களை அகரவரிசையில் தொகுத்து அவற்றிற்கான பொருள்களைத் தெளிவிக்கின்றன. மொழியில் உள்ள அனைத்துச் சொற்களையும் அகராதிகள் பதிவு செய்துவிடுவதில்லை. உலகில் உள்ள மொழிகளில் உள்ள அகராதிகள் மேலெல்லையாக 30 விழுக்காட்டுச் சொற்களை மட்டுமே பதிந்துள்ளதாக ஒரு புள்ளிக்குறிப்புக் கூறுகிறது. பதியப்படாத 70 விழுக்காட்டுச் சொற்களில் வட்டார வழக்குகள், வெளிவராத ஓலைச்சுவடிகள் மற்றும் வழக்கிழந்துபோன சொற்கள், சிதைந்த நூல்களிலிருந்த சொற்கள் என ஏராளமான மொழிக்கூறுகள் அடங்கும்.

மொழி தோன்றிய காலத்திலிருந்து இன்றைய காலக்கட்டத்தில் உருவாக்கப்படும் சொற்கள்வரை அனைத்தையும் உள்ளடக்கிய ஒரு பெருந்தொகுப்பே இன்றைய தேவை.

எனவே மொழிதோன்றிய காலத்திலிருந்து இன்று வரைதோற்றுவிக்கப்படும்சொற்களைஉள்ளடக்கியசொற் களஞ்சியம் அனைத்துத் துறையினராலும் உருவாக்கப்பட வேண்டும். அதை உலகம் முழுவதும் உள்ள பலதுறை சார்ந்த மக்களும் கையாளும்படியும் பயன்படுத்திக் கொள்ளும்படியும் அவை தொகுக்கப்படவேண்டும் என்று மொழியியலார் அறிவிக்கின்றனர்.

தமிழ்மொழியில் இன்றுள்ள அகராதிகளுக்கு வீரமாமுனிவரின் சதுரகராதியே வழிகாட்டியாக அமைந்தது. அதன்பிறகு அகராதிகள் பெருவளர்ச்சி பெற்று, பல்வேறு தலைப்புகளில் இன்று பல்துறைகளுக்கும் உருவாக்கப்பட்டு வருகின்றன.

**சொல்தரவகம்** (Word Corpus)

முதன்முதலில் 'சொல்தரவகம்' (Word Corpus) ஆங்கிலத்திற்கு உருவாக்கப்பட்டது.

தமிழ்நாட்டில் தமிழ்மொழிக்குத் தமிழ் மொழிச் சொல்தரவகம் அமைக்க வேண்டும் என்று முதலில் முன்மொழிந்தவர் அனைத்துலகப் பேறிஞரும் பேராசிரியருமான வ.அய்.சுப்பிரமணியம் அவர்களேயாவார்.

தமிழ்மொழியைப் பாதுகாக்கப் பல்வேறு திட்டங்களைத் தீட்டிச் செயற்படுத்தியவர் பேரா.வ.அய். சுப்பிரமணியம் அவர்கள். அதன் விளைவாக உதித்ததில் ஒன்றுதான் திராவிடப் பல்கலைக்கழகம்.

1983வாக்கில் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் வ.அய்.சுப்பிரமணியம் துணைவேந்தராக இருந்த போது, உலக அளவில் ஆங்கிலம் போன்ற சில ஐரோப்பிய மொழிகளில் சொல்தரவகத் தொகுப்பு நடைபெற்றுக்கொண்டிருந்ததுகண்டு, தமிழிலும் அவ்வாறு சொல்தரவகம் ஒன்று உருவாக்க வேண்டும் என்று அரசுக்கு மடல் வழியாகக் கருத்துரு அனுப்பினார். அதுவே தமிழ்மொழிக் காப்பிற்கும் வளர்ச்சிக்குமான உயர்நிலைச் செயற்பாடு என்று அறிஞர்கள் கருதினார்கள்.

அக்காலத்தில் தமிழ்நாட்டிலும், இந்தியாவிலும் சொல்தரவகம்பற்றி யாரும் பரவலாக அறிந்திருக்க வில்லை. கணினியின் செயற்பாடு, இணையதளம் இவையும் அக்காலத்தில் இல்லை.

இருப்பினும் எதிர்காலத் தேவையையும், தமிழின் முன்னேற்றத்தையும் கருத்திற்கொண்டு முற்கூறி (தீர்க்கதரிசி)யாக வ.அய்.சுப்பிரமணியம் அவர்கள் அரசிடம் வேண்டுகோள் விடுத்தது மட்டுமின்றி அதைச் செயற்படுத்தும் வகையும் செய்தார். அக்காலத்தில் அவை கணினி, இணையச் செயற்பாடு இன்றி மாந்த (manual power) உழைப்பினாலேயே செய்யவேண்டியிருந்தது. இன்றைய கணினிப் பணிகளுக்கு ஈடுகொடுக்கும் அளவிற்கு அன்றைக்கே விரைவாகச் செயற்பட்டவர் வ.அய்.சுப்பிரமணியம் அவர்கள்.

தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் உருவாக்கப்பட்டிருந்த 'களஞ்சியமையம்' என்ற Encyclopedea Centre அமைப்பு 'அறிவியல் களஞ்சியம்', என்றும், 'வாழ்வியல் களஞ்சியம்' என்றும் இருபிரிவாகப் பிரிந்து மொத்தம் 17 துறைகள் இயங்கின. தமிழ்நாட்டின் பல்வேறு பகுதியிலிருந்தும் தேர்ந்த பல்துறைப் பேராசிரியர்களும் இங்குப் பணியாற்றினர். நூற்றுவர் அளவில் இயங்கிய பலதுறைப் பேராசிரியர்கள் அவரவர் துறைகளில் உள்ள கலைச்சொற்கள் அனைத்தையும் தொகுத்துப் பெரும் எண்ணிக்கையிலான கலைச்சொற் பட்டியல் ஒன்றைத்

துணைவேந்தர் வ.அய்.சுப்பிரமணியம் உருவாக்கினார். அவை அனைத்தும் சொல்தரவகத்தின் தொடக்கச் சொற்கள் என்று வகைப்படுத்தி, அவற்றையே முதலீடாகக் கொண்டு தனித்துறை ஒன்றைச் சென்னையில் நிறுவவேண்டும் என்று அரசிடம் கோரிக்கையை முன்வைத்தார்.

பேரா.வ.அய்.சுப்பிரமணியம் அவர்களின் பதவிக் காலத்திற்குள் அது நிறைவேறாமல் போனது. அத் திட்டத்தைத் தொடர்ந்து யாரும் வலியுறுத்தி அரசின் கவனத்திற்குக் கொண்டு செல்லவில்லை. இந்நிலையில் 2018ஆம் ஆண்டு இத்திட்டம் மாற்றுருவத்தில் "சொற்குவை" என்ற பெயரில் மீட்டுருவாக்கம் பெற்றுத் தமிழ் அகராதித் துறையில் ஒரு நம்பிக்கையைக் கொடுத்தது.

இந்திய மொழிகளில் முதன்முதலாகப் பேரகரமுதலி (Lexicon) உருவானது தமிழில்தான். சென்னைப் பல்கலைக்கழகம்தான் 'தமிழ்ப் பேரகராதி'யை 80 ஆண்டுகளுக்கு முன் உருவாக்கியது. அன்றையிலிருந்து தமிழில் ஆயிரக்கணக்கான அகராதிகள் இன்றுவரை வெளிவந்துகொண்டிருக்கின்றன.

40 ஆண்டுகளுக்கு முன் சொல்தரவகத்தின் தொடக்க முயற்சி தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் எவ்வாறு தொடங்கப்பட்டதோ, அதேபோல் ஏறக்குறைய அந்தக் காலக்கட்டத்திலேயே "மொழிஞாயிறு" தேவநேயப் பாவாணரை இயக்குநராகக் கொண்டு தமிழில் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககம் தொடங்கப்பட்டுச் செயல்பாட்டுக்கு வந்தது.

இந்திய மொழிகளில் சொற்பிறப்பியல் அகராதி (Etymological Dictionary) முதன்முதலில் வெளி வந்தது தமிழ்மொழியில்தான்.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் 2011ஆம் ஆண்டிற்குள் 31 தொகுதிகளை வெளியிட்டுத் தமிழ்மொழிக்குப் பெருமைசேர்த்தது. அதன் திருத்தப்பதிப்புச் செயற்பாட்டின் ஊடேயே 'சொற்குவை' (Word Corpus) என்ற செயற்பாட்டுத் திட்டத்தையும் இவ்வியக்ககம் வடிவமைத்து அரசின் கோரிக்கைக்காக அணியப்படுத்தி வைத்திருந்தது.

2017 ஆகத்து மாதம் திரு.க.பாண்டியராசன் தமிழ்வளர்ச்சி மற்றும் தொல்லியல் துறைக்கு அமைச்சராகப் பொறுப்பேற்ற முதல் நாளே தமிழ்வளர்ச்சித் துறைக்குக் கீழே இருந்த அனைத்துத் துறையினரையும் கூட்டி எதிர்காலச் செயற்பாடுகளைப் பற்றி கலந்தாய்வு நடத்தினார்.

அப்போது, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட இயக்ககம் ஏற்கெனவே வடிவமைத்து வைத்திருந்த 'சொற்குவைத் திட்டத்'தை முன்வைத்தது. அமைச்சர் திரு க. பாண்டியராசன் அவர்களை இத்திட்டம் மிகவும் கவர்ந்ததால் தொடர்ந்து இந்தத் திட்டத்திற்கான கலந்துரையாடல் கூட்டங்கள் பலமுறை நடத்தப்பெற்றன.

அமைச்சரின் அறிவுரையின்படி அரசு ஒப்புதலுக்கு முன்னமே அகரமுதலி இயக்ககத்தில் செயல்திட்டங்கள் அணியமாக்கப்பட்டன. குறிப்பாக, தமிழ்ப் பல்கலைக் கழகத்திலுள்ள அனைத்துத் துறைத்தலைவர்கள் கூட்டத்தைக் கூட்டி அவர்களிடம் சொற்குவைத் திட்டம் பற்றி விளக்கமளிக்கப்பட்டது. தமிழ்ப்பல்கலைக்கழகப் பேராசிரியர்கள் அனைவரும் இத்திட்டத்திற்குத் துறைசார்ந்த கலைச்சொற்களை வழங்க ஒத்துழைப்பு நல்கவேண்டுமென்று துறை அமைச்சர் அவர்களால் வலியுறுத்தப்பட்டது.

தமிழ்ப்பல்கலைக் கழகத்திலுள்ள 24 துறைத் தலைவர்களையும் அவர்கள் ஏற்கெனவே உருவாக்கி வைத்திருந்த கலைச்சொற்களை அகரமுதலி இயக்ககத்திற்கு அனுப்பவும், அதைத் திரட்டி அகரமுதலி இயக்ககம் அவற்றுடன் தாம் உருவாக்கினவற்றையும் சேர்த்து ஒவ்வொரு மாதமும் அரசுக்கு அனுப்ப உடனடியாகச் செயல்திட்டம் உருவாக்க மாண்புமிகு அமைச்சரால் பணிக்கப்பட்டது. அது ஏனோ செயல்வடிவம் பெறவில்லை.

இந்நிலையில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டத்தின் முதல் இயக்குநர் தேவநேயப் பாவாணருக்குப் பின் அவருடைய எண்ணங்களைச் செயல்வடிவமாக்க, அவரைப் போல முழு அதிகாரமுள்ள இயக்குநராகத் திரு. தங்க காமராசு 2018 மேத் திங்களில் பதவியேற்றார். பொறுப்பேற்றவுடன் துறை அமைச்சர் அவர்களின் அறிவுறுத்தலின்படி "சொற்குவை" திட்டத்திற்கு முழுவடிவம் கொடுக்கும் முயற்சியில் ஈடுபட்டார்.

2018 ஆம் ஆண்டு சூலைத் திங்களில் துறை அமைச்சர் அவர்களின் தலைமையிலும் தமிழ்வளர்ச்சித் துறையின் அரசு செயலாளரின் முன்னிலையிலும் சென்னைப் பல்கலைக் கழகப் பதிவாளர், தமிழ் வளர்ச்சித் துறைத் தலைவர்கள், தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் தமிழ் அகராதியியல் துறைத்தலைவர் உள்ளிட்டோர் கலந்துகொண்ட கூட்டத்தில் அனைவரும் இத்திட்டத்தை அகரமுதலி இயக்ககம் செயற்படுத்த வேண்டுமென்று கருத்துத் தெரிவித்தார்கள். இத்திட்டத்தைச் செந்தமிழ்ச் சொற் பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் செயற்படுத்த ஏதுவாகத் தமிழ்வளர்ச்சித்துறை இயக்குநர் அரசுக்கு ஏற்கெனவே மடல் அனுப்பியிருந்தார். இந்தக் கருத்தையே சென்னைப் பல்கலைக் கழகப் பதிவாளரும் கூட்டத்தில் தெரிவித்தார். கூட்டத்தில் மின்காட்சியுரை வாயிலாக அகரமுதலி இயக்குநர் சொற்குவைத் திட்ட வரையறைகளை விளக்கியதால் இத்திட்டத்தைச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககமே முன்னெடுத்து நடத்தலாம் என உறுதி செய்யப்பட்டு, தமிழ்வளர்ச்சித் துறை அரசு செயலாளர் அவர்களால் உடனடியாகக் கருத்துரு கோரப்பட்டது.

அகரமுதலி இயக்ககத்தில் 'தமிழ்க் கலைக் கழகம்' என்ற அமைப்புத் தொடங்கப்பட்டு, அதன்வழி

இயக்ககப் பணியாளர்களே தங்கள் பணிகளுக்கிடையில் ஒரு மாதத்திற்கு ஆயிரம் புதிய கலைச் சொற்கள் வீதம் சொற்களை உருவாக்கித் தொகுப்பில் சேர்த்து, அவற்றை வல்லுநர் குழுவிலும் வைத்து இறுதிப்படுத்தி வந்தனர். அந்த நடைமுறையில் தமிழ்ப் பல்கலைக் கழகமோ வேறு யாரின் உதவியுமின்றி, இயக்ககத்திலிருந்து ஒவ்வொரு மாதமும் அரசுக்குத் தொடர்ந்து ஆயிரம் சொற்கள் சொற்குவைக்கென அனுப்பப்பட்டு வந்தது. இவை சொற்குவைக்கு அரசாணை வரும் இடைக்காலத்திலேயே நடைபெற்ற பணிகளாகும்.

'சொற்குவை'த் திட்டம் பற்றி முழு வரைவறிக்கை அகர முதலி இயக்ககத்தால் அரசுக்கு அனுப்பப்பட்டது. அதனடிப்படையில் 28.06.2018ஆம் நாளன்று சட்டப்பேரவை விதி எண் 110–இன் கீழ் மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் எடப்பாடி கே.பழனிசாமி அவர்களால் ஆண்டுக்கு ஒரு கோடி நிதி ஒதுக்கீடு என்ற வரையறையோடு 'சொற்குவை'த் திட்டம் அறிவிக்கப் பட்டது.

இந்நிலையில், தமிழ்ப் பல்கலைக்கழகத் துணை வேந்தராக முனைவர் கோ.பாலசுப்ரமணியன் அவர்கள் பொறுப்பேற்றுக்கொண்டார். சொற்குவைத் திட்டத்திற்கான பணிகளை அகரமுதலி இயக்ககம் தொடங்கிவிட்டது எனவும், சொற்குவைத் திட்டம் அகரமுதலி இயக்ககத்தால் செயற்படுத்தப்படுமேயானால் தமிழ்ப் பல்கலைக்கழகம் அதற்குக் கல்வியியல் உறுதுணை (Acadamic support) அளிக்குமெனவும் உறுதி கூறினார். அது அகரமுதலி இயக்ககத்திற்கு ஊக்கத்தையளித்தது.

துணைவேந்தர் முனைவர் கோ.பாலசுப்ரமணியன் அவர்கள் மொழியியல் அறிஞராகவும் பட்டறிவு மிக்கவராகவும் இருப்பதனால் அவரின் வழிகாட்டுதலின் படி சொற்குவைத் திட்டத்தை அகரமுதலி இயக்ககம் செயற்படுத்த ஏதுவாக 11.02.2019 ஆம் நாளன்று அரசாணை பிறப்பிக்கப்பட்டது.

நாற்பது ஆண்டுகளுக்கு முன் அந்நாள் தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் பேராசிரியர் வ.அய். சுப்பிரமணியம் அவர்களின் சொல்தரவகம் பற்றிய செய்திகளைச் செய்தித்தாள் ஊடகங்கள் பெருமைப் படுத்தி வெளியிட்டதை, இந்நாள் தமிழ்ப்பல்கலைக்கழகத் துணைவேந்தர் முனைவர் கோ.பாலசுப்ரமணியன் நினைவுகூர்ந்து, மேனாள் துணைவேந்தர் வ.அய். சுப்பிரமணியம் அவர்களின் கனவு அகரமுதலி இயக்ககம் வழி மீண்டும் மெய்ப்படப் போகிறது என உறுதியாகப் பேசினார்.

தமிழ்ப்பல்கலைக்கழகத் துணைவேந்தர் முனைவர் கோ.பாலசுப்ரமணியன் கூறியதுபோல், அந்நாளில் மொழியியல் அறிஞர் வ.அய்.சுப்பிரமணியம் முனைந்த சொல்தரவகப் பணியை இன்று அகரமுதலி இயக்ககம் கையிலெடுத்து, அதை முழுவீச்சில் செயற்படுத்தி



முனைவர் கோ. பாலசுப்ரமணியன்
துணைவேந்தர்
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்

வருவது சாலப்பொருத்தம் என்று உலகத் தமிழர்கள் பாராட்டுகிறார்கள்.

அமெரிக்காவில் உள்ள சிகாகோ மாநகரில் நடைபெற்ற 10–ஆவது உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டின் போது 05.07.2019ஆம் நாளன்று சொற்குவை வலைத்தளத்தை (sorkuvai.com) மாண்புமிகு தமிழ்வளர்ச்சி மற்றும் தொல்லியல்துறை அமைச்சர் க.பாண்டியராசன் அவர்கள் தொடங்கிவைத்தார். அன்று முதல் உலகமுழுவதும் தமிழறிஞர்கள், அறிவியல் மற்றும் அனைத்துத்துறை சார்ந்த தமிழறிஞர்கள், பேராசிரியர்கள், மாணவர்கள், பொதுமக்கள் அனைவரும் சொற்குவை வலைத்தளத்தைப் பயன்படுத்துகிறார்கள். சொற்குவையானது இன்று அறிவியல் தொழில்நுட்பத்தின் துணைகொண்டு உலகை வலம்வருகின்றது.

3,84,288 சொற்கள் நாளிதுவரையில் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ள சொற்குவை வலைத்தளமானது தற்போது 5 இலக்கத்தை நோக்கி நடையிடுகிறது. தமிழ்மொழி வளர்ச்சியின் முதல் செயற்பாடே சொற்குவைதான் என்பதைச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் இயக்ககம் நிறுவி வருகிறது.

தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் முதல் துணை வேந்தர் பேரா.வ.அய்.சுப்பிரமணியம் அவர்களின் மறுதோன்றலாக இன்றைய துணைவேந்தர் முனைவர் கோ.பாலசுப்ரமணியன் அவர்கள் தமிழ்ப்பணியாற்றுவதும், பேரா.வ.அய்.சுப்பிரமணியம் அவர்களின் கனவுத் திட்டமான சொல்தரவகத்தின் செயல்வடிவமாகச் சொற்குவைத் திட்டம் உருவெடுத்திருப்பதும் மறுக்க முடியாத உண்மையாகும்.

முனைவர் மா.பூங்குன்றன்
பதிப்பாசிரியர், அகரமுதலி இயக்ககம்



# இல்லந்தோறும் சொல்லுருவாக்கம்

**செ**ந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வழிகாட்டுதலின்படி முனைவர் வே. குழந்தைசாமி அவர்களின் முன்னெடுப்பால் இணைய வழி இல்லத் தமிழியக்கம் ஆகத்துத் திங்கள் மூன்றாம் நாள் மலருகிறது.

தமிழ்நாட்டில் இன்றைக்கு ஆங்கிலக் கலப்புப் பேச்சாலும் எழுத்தாலும் தமிழ் தனது சிறப்பையும் வடிவத்தையும் அழகையும் இழந்து கொண்டிருக்கும் நிலையைத் தமிழ் மக்களிடையே உணரச் செய்ய வேண்டும். அவ்விழிப்புணர்வின் வழியாகத் தமிழ்பேசும் மக்கள் ஒவ்வொருவரிடமும் விரும்பத்தக்க மாற்றத்தை அவரவரே விரும்பி ஏற்கும் வண்ணம் மறுமலர்ச்சி ஏற்படுத்தப்பட வேண்டும்.

இத்தகைய மறுமலர்ச்சியை மன்றங்களிலோ அவைகளிலோ தொடங்குவதைவிட இல்லங்களில் தொடங்குவது என்பது இயல்பானதாயும் இயலுவதாயும் அமையும். இல்லத்தில் தொடங்கும் மாற்றம் ஊரிலும் நாட்டிலும் எதிரொலிக்கும் என்பது திண்ணம். தற்காலத்தில் இணையம் என்ற ஆற்றல்மிகு ஊடகம் பெரு நோக்கத்திற்காக மக்களை இணைக்கும் வல்லமை கொண்டதாயும் செயலூக்கம் அளிப்பதாயும் உள்ள நிலையில் வையம் அனைத்திலும் வாழும் தமிழர் இல்லங்களை இணையம் வழியாக இப்பெரு நோக்கத்திற்கும் பேச்சுத்தமிழ் மறுமலர்ச்சிக்கும் இணைக்க வேண்டும் என்ற திண்ணிய எண்ணத்தால் இணையவழி இல்லத் தமிழியக்கம் மலருகிறது. அதற்கான வலைப்பதிவை உருவாக்குவதன் வாயிலாக இந்தப் பெரு நோக்கத்தை நோக்கி நகர முடியும். தமிழ் உணர்வாளர்கள், இல்லத்தரசிகள், இளவல்கள் மற்றும் மாணவ–மாணவிகள் ஆகிய அனைவரின் பங்களிப்புடன் இது ஒரு மாபெரும் தன்னெழுச்சி இயக்கமாக உருவாகும்.

இந்த இணையவழி இயக்கம் தடையற்றது. வெளிப் படைத்தன்மை கொண்டது. அரசியல், சமய மற்றும் இன உணர்வுகளைத் தூண்டும் வகையில் கருத்துகளை யாரும் வெளியிட வேண்டாம். ஒவ்வொருவருக்கும் உரிய முறையில் தம் கருத்தை வெளிப்படுத்த உரிமை உள்ளதால் தகுதியாலோ, புலமையின் அடிப்படையிலோ யாரும் யாரையும் தாக்கும் வகையில் கருத்துகளைக் கூற வேண்டாம். தமிழ்ப்பண்பும் மரபும் கண்ணியமும் நம்மை ஒருங்கிணைக்கும் வலிமைமிகு ஊட்டம். கருத்துப்பகிரும் வண்ணம் மூன்று வழிமுறைகள் இந்தப் பதிவில் உருவாக்கப்படும். குறிக்கோள் சார்ந்த இயக்கத்துக்கு வலுசேர்க்கும் கருத்துகள் இதில் வெளியிடப்படும். யார் வேண்டுமானாலும் மேற்சொன்ன வண்ணம் கருத்துகள் வழங்கலாம்.



முனைவர் வே. குழந்தைசாமி

**அவை** : வழுச்சொற்களைக் களையவும், புதிய சொற்களை அறிமுகம் செய்யவும் இது பயன்படும்.

**சொற்பெட்டகம்** : இதில் பேச்சுவழக்குச் சிறக்கவும் முந்தைய தலைமுறையின் இல்லத்தில் பேசிய பாங்கின் அடிப்படையில் வழக்கொழிந்த சொற்கள் மற்றும் புதிய பயன்பாட்டுச் சொற்களைச் சொல் அவையின் தெளிவுபடுத்தபட்ட, பேச்சுமொழிக்குச் செறிவூட்டும் வகையில் இந்தச் சொற்பெட்டகம் உருவாக்கப்பட்டுள்ளது. புதிய சூழலுக்கும் தேவைக்கும் ஏற்ற தமிழ்ச் சொற்களை உருவாக்கி அவற்றின் அன்றாடப் பயன்பாட்டை ஊக்குவித்தல், பயன்பாட்டில் இல்லாத தமிழ்ச்சொற்களை மீள்பயன்பாட்டுக்குக் கொண்டு வருதல், தமிழரின் பண்பாட்டுப் பின்புலத்தில் பொதிந்துள்ள பண்பாட்டுக் கூறுகளை இளைய தலைமுறையினருக்கு அறிமுகம் செய்தல் ஆகிய குறிக்கோள்களுடனும்,

“இல்லந்தோறும் தமிழ்ஒளி ஏற்றுவோம்!
உள்ளந்தோறும் தமிழுணர்வு ஊட்டுவோம்!”

என்ற கொள்கை முழக்கத்துடனும் மலர்கிறது இல்லத் தமிழியக்கம்.

இவ்வியக்கத்தின் வழியாகப் பெறப்படும் இல்லக் கலைச்சொற்கள் ஆய்வுசெய்யப்பட்டுச் சொற்குவை வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்படும். தமிழுக்குத் தொண்டு செய்யும் 73 அகவையான முனைவர் வே. குழந்தைசாமி அவர்களைப் பாராட்டுவோம். ●

இல்லத் தமிழ் இயக்கம் தொடக்க விழாவை 03.08.2020 அன்று காலை 10.00 மணியளவில்
Google Meet Link :meetgoogle.com/gwq-psnr-jtk நேரலையின் வாயிலாகக் காணலாம்.